[21st January 1961

## *Rural Higher Institutes*

* 53 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்திலுள்ள ரூரல் ஹையர் இன்ஸ்டிட்யூட்டுகளில் தேறிய மாணவர்களை மேல் படிப்புக்கு நம் பல்கலைக் கழகங்கள் அனுமதிக்கின்றனவா ?

(இ) இல்லையானால், என்ன காரணம் ? பல்கலைக் கழகங்களில் இவர்களுக்கு அங்கிகாரம் கிடைக்க அரசாங்கம் ஏதேனும் முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) That matter rests entirely with the discretion of the Universities.

SRI A. VEDARATHNAM : உடல் உழைப்பிற்கு முக்கியத்துவம் வேண்டுமென்று கூறப்படுகிற இந்தக் காலத்தில் இந்த உடல் உழைப்பை ஆதாரமாகக் கொண்ட ரூரல் இன்ஸ்ட்டிட்யூட் மாணவர்களை பல்கலைக் கழகங்களில் அனுமதிக்கவில்லையென்றால் மேல் படிப்பிற்காக, அது நம் நாட்டின் எதிர்காலத்தைப் பாதிக்கக்கூடும் என்பதை உணர்ந்து அரசாங்கம் அவர்களை பல்கலைக் கழகங்ளில் அனுமதிப்பதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மேல் படிப்பு என்று சொன்னால் மேல் படிப்பை பெறுவதற்கு ஓரளவு தகுதி வாய்ந்திருக்க வேண்டும். அந்தத் தகுதியிருக்கிறதா இல்லையா என்பதைப் பொறுத்துத்தான் மேல் படிப்பிற்கு இதை எடுத்துக் கொள்ளலாமா இல்லையா என்பது பற்றி முடிவு செய்யவேண்டும். இப்பொழுது இருக்கக்கூடிய சட்டப்பிரகாரம் சர்வகலாசாலை நடத்துகிற பரீட்சைகளில் பாஸ் செய்கிறவர்களைத்தான் மேல் பட்டப்படிப்பிற்கு எடுத்துக் கொள்ள முடியும். இதை இண்டர் யூனிவர்ஸிட்டி போர்ட் ஆலோசித்துக் கொண்டிருப்பதாக தகவல். வேறு தகவல் இல்லை.

SRI A. VEDARATHNAM : பல்கலைக் கழகங்களுக்கு தேவையான எல்லாத் தகுதியும் இருந்தபோதிலும்கூட இந்த ரூரல் இன்ஸ்டிட்யூட்டில் பாஸ் செய்த மாணவர்கள் அங்கு அனுமதிக்கப் படுவதில்லை. எனவே, தகுதியுள்ளவர்களையாவது அதற்கு ஏதேனும் தனி டெஸ்ட் வைத்து அதன் மூலம் இந்த மாணவர்களை அங்கு அனுமதிக்க அரசாங்கம் ஏதாவது வகை செய்ய முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதற்கு இன்னொரு பரீட்சை வைப்பது என்றால் அது சர்வகலாசாலை பரீட்சையாகத்தான் இருக்க வேண்டும். பரீட்சை என்றால் எந்தவிதமான பரீட்சைகள் எழுதவேண்டுமென்று யூனிவர்ஸிட்டி பார்த்து திட்டம் போடவேண்டுமே தவிர, சர்க்கார் இதில் ஒன்றும் செய்ய முடியாது.